# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 4    திருவள்ளுவர் ஆண்டு 2051    செப்டம்பர் திங்கள் - 2020




**வேளாண்மைக் கலைச்சொற்கள்!**

**மெய்ந்நிகர் கருத்தரங்க நிறைவு விழா!**

**பொருள் மாறிய பழமொழிகள்!**

**மால்கொடி!**

**சோறு – சாதம்**

**பழந்தமிழரின் சூழலியல் அறிவு !**








# வேளாண்மைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| 1. | Biennial crops | ஈராண்டுப்பயிர் |
| 2. | Bio fertilizers | உயிரி உரங்கள் |
| 3. | Bioherbicided | உயிரிக் களைக்கொல்லி |
| 4. | Vermicompost | மண்புழு உரம் |
| 5. | Buck scrapper | மண்வாரும் கருவி |
| 6. | Burmese settum | தழைமிதிப்பான் |
| 7. | Button mushroom | மொட்டுக்காளான் |
| 8. | Cultivators | கொத்துக்கலப்பை |
| 9. | Cycle plough | சுழற்சி உழவு |
| 10. | Dapok nursery | சுருள்பாய் நாற்றங்கால் |
| 11. | Digging fork | மண்தோண்டு முட் கருவி |
| 12. | Dry nursery | புன்செய் நாற்றங்கால் |
| 13. | Earthworm manure | மண்புழு உரம் |
| 14. | First irrigation | பயிருக்கான தலைத்தண்ணீர் |
| 15. | First ploughing | தலை உழவு |
| 16. | Garden tractor | வேளாண் இழுவுந்து |
| 17. | Hand weeding | கை களையெடுத்தல் |
| 18. | Harrows | பரம்படிக்கும் பலகைகள் |
| 19. | Insect trap crops | பூச்சியுண்ணும் பயிர் |
| 20. | Inter crops | ஊடுபயிர்கள் |
| 21. | Intercultivator | ஊடுகலப்பை |
| 22. | Line sowing | வரிசை விதைப்பு |
| 23. | Mushroom cultivation | காளான் வளர்ப்பு |
| 24. | Scrapper | மண் சமனிடும் கருவி |
| 25. | Seed plot | விதைப்பாத்தி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி ஆவணி
செப்டம்பர் 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.78, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

அன்பானவர்களே!

பொதுமுடக்கத்திலிருந்து இயல்பான வாழ்க்கை முறைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறோம் என்பது மனநிறைவை அளிக்கிறது. அகரமுதலி இயக்ககத்திற்கு ஆகத்துத் திங்களும் சுறுசுறுப்பான காலமாக அமைந்தது. 03.08.2020ஆம் நாள், கோவையை நடுவாகக் கொண்டு தொடங்கப்பெற்ற "இல்லத் தமிழ் இயக்கத்தின்" இணையவழித் தொடக்க விழாவும், 08.08.2020ஆம் நாள் கோவை தூயதமிழ் இளையோர் பாசறையுடன் இணைந்து அகரமுதலி இயக்ககம் நடத்திய இணையவழி மெய்ந்நிகர் கருத்தரங்கத்தின் 4ஆவது அமர்வும், 09.08.2020ஆம் நாள் 5ஆவது அமர்வும் மிக சிறப்பாக நடைபெற்றன.

16.08.2020ஆம் நாள் நடைபெற்ற மெய்ந்நிகர் கருத்தரங்கத்தின் நிறைவு விழாவில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தரும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தரும், பள்ளிக்கல்வித்துறை இயக்குநரும், வி.ஜி.பி. உலகத் தமிழ்ச் சங்கத்தின் தலைவரும் கலந்துகொண்டு அகரமுதலி இயக்ககத்தின் செயல்பாட்டினையும், 5 அமர்வுகளில் கலந்துகொண்டு கருத்துரை வழங்கிய 38 மாவட்டங்களைச் சேர்ந்த 44 தூயதமிழ் மாணவ–மாணவியரையும் ஊக்குவிக்கும் வகையில் வாழ்த்திப் பேசினார்கள். இந்நிகழ்வை உலகம் முழுவதிலுமிருந்து ஆயிரக்கணக்கான தமிழார்வலர்கள் கண்டு களித்தார்கள்.

அதன்பிறகு 23.08.2020ஆம் நாள் காலையில் பன்னாட்டுத் தமிழ் மற்றும் தொடர்பியல் ஆய்வு மையத்தின் இணையவழி மெய்ந்நிகர் தொடக்க விழாவில் அகரமுதலி இயக்ககத்தின் இயக்குநர் என்ற முறையில் பங்கேற்று, "தொடர்பியல் ஆய்வில் தமிழ்" என்னும் தலைப்பிலான கருத்தரங்கைத் தொடங்கி வைத்துத் தொடர்பியல்துறைப் பேராசிரியர்களின் கேள்விகளுக்கு விடையளித்தேன். அன்று மாலையில் தென்னிந்திய புத்தக விற்பனையாளர் மற்றும் பதிப்பாளர் சங்கத்தினர் நடத்திய "பதிப்பகத் துறையில் தமிழ்" என்னும் தலைப்பிலான இணையவழிக் கருத்தரங்கைத் தொடங்கி வைத்துச் சிறப்புரை ஆற்றியதுடன், அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாகத் தமிழ்நாடு அரசு பதிப்பகத்தாருக்குச் செய்துவரும் பல்வேறு நற்பணிகளையும் திட்டங்களையும் பற்றி விளக்கினேன்.

25.08.2020 ஆம் நாள் தஞ்சாவூர் சென்றேன். 26.08.2020ஆம் நாள் தஞ்சாவூர் மாவட்டம் திருவாவடுதுறை ஆதீன மடத்திற்குச் சென்று அங்குள்ள நூல் நிலையத்தைப் பார்வையிட்டதனால் தொன்மையான பல தமிழ் அகராதிகளைக் காணும் அரிய வாய்ப்பு ஏற்பட்டது. மடத்தின் 24ஆவது தலைவர் (24 ஆவது குருமகாசந்நிதானம்) வணக்கத்திற்குரிய அம்பலவாண தேசிகபரமாச்சாரிய சுவாமிகளைக் கண்டு வணங்கி உரையாடினேன். தெய்வ மணமும் அறிவு மணமும் கமழும் ஆதீனத்திற்குச் சென்று வந்ததும், ஆதீனம் என்னை வாழ்த்தியதும் எனக்குப் புதிய களிப்பை அளித்தது. 27.08.2020ஆம் நாள் மயிலாடுதுறை தருமபுரம் ஆதீனம் சென்று அங்குள்ள நூல்நிலையத்தைப் பார்வையிட்டேன்.

29.08.2020ஆம் நாள் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்குச் சென்று மாண்பமை துணைவேந்தரைச் சந்தித்துச் சொற்குவைத் திட்டத்தின் எதிர்கால நடவடிக்கைகள் பற்றியும் தற்போதைய நிலையைப் பற்றியும் கலந்துரையாடினேன். இப்படியாகக் கடந்த ஆகத்துத் திங்கள் முழுவதும் பயனுள்ளதாக அமைந்தது. இயல்புநிலை நிலவிய காலத்தைவிட பொதுமுடக்கக் காலத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வீரியத்துடன் செயல்படுவதாகத் தமிழறிஞர்களும் நடுநிலையாளர்களும் நேரிலும் தொலைபேசியிலும் வாழ்த்துவதும், போற்றுவதும் மகிழ்ச்சியாக இருக்கிறது. இத்தகைய மகிழ்ச்சிதரும் ஊக்கத்தின் துணைகொண்டு அகரமுதலி இயக்ககம் தொடர்ந்து தனது தமிழ்ப்பணியை முன்னெடுக்கும்.

மீண்டும் சந்திப்போம்...

●

# அறிய வேண்டிய அரிய செய்தி - 4

## ‘ஆங்கில அகராதிகளில் தமிழ்ச்சொற்கள்’

ஆங்கிலமொழி உலகிலுள்ள பல்வேறு மொழிகளில் வழங்கும் சொற்கள் பலவற்றைப் பயன்படுத்திக் கொண்டிருப்பது உண்மை. சில வேளைகளில் பிற நாடுகளுக்குச் சென்ற ஆங்கிலேயர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்றபொழுது தங்கள் பேச்சிலும் எழுத்திலும் பிறநாட்டுச் சொற்கள் சிலவற்றைப் பயன்படுத்திய காரணத்தால் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றவையும் உண்டு.

கி.பி 15ஆவது நூற்றாண்டு முதல் 19 ஆம் நூற்றாண்டுவரை ஆங்கிலேயர்கள் இந்திய நாட்டோடு கொண்டிருந்த வாணிகத் தொடர்பினாலும், அரசியல் தொடர்பினாலும் ஆங்கில மொழியில் சென்றேறி வழங்கிய சொற்கள் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றுள்ளன. அத்தகைய தமிழ்ச்சொற்களுள் சிலவற்றைக் கீழே காணலாம்.

1. “கஞ்சி” Congee என்னும் சொல் 1698 இல் ஆங்கிலத்தில் பயன்படுத்தப்பட்டுப் படைச் (இராணுவச்) சிறைக்குப் பெயராகக் “கஞ்சிவீடு” – “Congee house” என ஆங்கிலத்தில் வழங்கியுள்ளனர். சிறையில் சோறு போடாமல் கஞ்சியே வார்க்கப்பட்டமையால் “கஞ்சி வீடு” என்பது சிறைக்குரிய பெயராக மதிக்கப்பட்டுள்ளது.

2. “கயிறு” என்பது திருக்குறளில் “திருவினைத் தீராமை ஆர்க்குங் கயிறு” (குறள். 482) என்றும், “கயிறு பிணித்துக் காடிவைத்த கலன்” (56–57) எனப் பெரும்பாணாற்றுப்படையிலும் சொல்லப்பட்டுள்ளது. மலையாளத்தில் “சயறு” என வழங்கி அங்குத் தேங்காய் நாரிலிருந்து திரிக்கப்படும் கயிற்றைக் குறித்தது. தேங்காய் நாரிலிருந்து எடுக்கப்படும் கயிற்றைக் குறிக்க, 1582இலிருந்து “Coir” என ஆங்கில அகராதிகளில் வழங்கப்பட்டுவருகிறது.

3. சோறுங்கறியும் அடிப்படைத் தமிழ்ச்சொற்கள். கறிக்கப்படுவது கறி.

“கறி” என்னும் தமிழ்ச்சொல் தொன்றுதொட்டுத் தமிழகத்தில் வழங்கி வருவது. சான்று “கருங்கொடி மிளகின் காய்த்துணர் பசுங்கறி” (மலைபடு.521). கறியைக் குறிக்க ஆங்கிலத்தில் ‘Curry’ என்னும் சொல் 1898 முதல் வழங்கப்படுகிறது.

4. “காசு” என்னும் தமிழ்ச்சொல் சின்ன நாணயத்தைக் குறிப்பதற்காக 1898 முதல் “Cash” என ஆங்கிலத்தில் வழங்கப்பட்டுள்ளது. “வாசி தீரவே காசு நல்குவீர்” என்று திருஞானசம்பந்தர் கூறியுள்ளார்.

5. “குயில்” என்னும் தமிழ்ப்பறவைப் பெயர் “Koel” என்று ஆங்கிலத்தில் 1826 முதல் வழங்கிவருகிறது. “குயிலுதல்” என்றால் “கூவியழைத்தல்” என்பது பொருள். இச்சொல் இலக்கியங்களில்,

“இரும் குயில் ஆல இன வண்டு
யாழ்செய” (சிலப். வஞ்சி.26 : 112)

என்று சிலப்பதிகாரத்திலும்,

“கொல்கரை நறும்பொழிற் குயில் குடைந்துதிர்த்த” (சிறுபாண்.4)

என நத்தத்தனார் இயற்றிய சிறுபாணாற்றுப்படையிலும் இடம்பெற்றுள்ளது.

6. “தயிர்” என்ற தமிழ்ச்சொல் கழகக்கால இலக்கியங்களில் பெருவரவாக வழங்கியதொரு சொல்.

குறுந்தொகையில்

“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்” (குறுந்.167:1)என்றும்

பெரும்பாணாற்றுப் படையில்

“கூம்புமுகிழ் உறையமை தீந்தயிர் கலக்கி” (பெரும்.158) என்றும்

மலைபடுகடாமில்

“கானிலை எருமை கழைபெய் தீந்தயிர்” (மலைபடு.523) என்றும் வந்துள்ளது.

தயிர் என்பது 1776 இல் ஆங்கிலத்தில் “Tyer” என்று வழங்கியுள்ளது.

7. “மாங்காய்” என்ற தமிழ்ச்சொல் போர்ச்சுக்கீசிய மொழியிலும் சுபேனிசு (Spanish) மொழியிலும் வழங்கி, பிறகு ஆங்கிலத்தில் சென்று சேர்ந்துள்ளது. 1665இல் டி.ஹெர்பர்ட் என்பார் எழுதிய பயண நூலில் ஆங்கிலத்தில் இச்சொல் “Mango” என வழங்கி அவ்வடிவத்தில் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றுள்ளது.

‘மா’ என்ற மரப்பெயரடியாக ‘மாங்கனி, மாங்காய், மாந்தளிர் போன்ற பல்வேறு சொற்கள் தமிழில் வந்துள்ளன.

“மாவின் கனியொடு வாழைத்தீங்கனி” (சிலப். மதுரை.16:26)

என சிலப்பதிகாரத்திலும்,

“மாவின் தளிர் ஏரன்ன மேனி” (மதுரைக்.706,707)

என மதுரைக்காஞ்சியிலும்,

“கழனி மா அத்து விளைந்துகு தீம்பழம்” (குறுந்.8:1)

என்று ஆலங்குடிவங்கனார் பாடிய குறுந்தொகைப் பாடல்வரியிலும் இடம் பெற்றுள்ளது.

8. “தோப்பு” என்னும் சொல் 1698இல் ஆங்கில மொழியில் இடம்பெற்றுள்ளது. மரங்கள் நிரம்பியுள்ள இடம் ‘தொகுப்பு (அல்லது) தோப்பு’ எனப்பட்டது. தமிழ், மலையாளம், கன்னடம், துளு ஆகிய மொழிகளில் “தோப்பு” என்ற வழக்கு உண்டு. இதனை ஆங்கிலத்தில் “Tope” என்று வழங்கியுள்ளனர்.

இவ்வாறு சில சொற்தேவைகளை நிரப்புவதற்காக ஆங்கிலத்தில் சென்று சேர்ந்து வழங்கிய பல தமிழ்ச் சொற்கள் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றுள்ளன.

கி.இராமர்
தொகுப்பாளர், அகரமுதலி இயக்ககம்

# மருத்துவக் கல்லூரிகளிலும் தமிழ்ப் பாடங்களைச் சேர்க்க வேண்டும்! தமிழகம் சார்ந்த போட்டித் தேர்வுகளில் தமிழைக் கட்டாயமாக்க வேண்டும்! தூயதமிழ் மாணவர்களின் அடுக்கடுக்கான கோரிக்கைகள்!

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவை தூயதமிழ் இளைஞர் பாசறை இணைந்து நடத்திய, “தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும்! தீர்வுகளும்!” என்ற தலைப்பிலான இணையவழி இளையோர் கருத்துரையின் 3, 4, மற்றும் 5ஆம் அமர்வுகள் முறையே 19/07/2020, 08/08/2020, 09/08/2020 ஆகிய நாள்களில் சிறப்பாக நடைபெற்றன. அமர்வுகளில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் தூயதமிழ் பேசுவதின் சிறப்பு, இன்றியமையாமை மற்றும் அகரமுதலி இயக்ககத்தின் செயல்பாடுகள் குறித்துச் செறிவாக எடுத்துரைத்து நிகழ்வில் தலைமை தாங்கிட, தூயதமிழ்ப் பற்றாளர் பரிசுபெற்ற திரு.சி.மணிகண்டன் வரவேற்புரை வழங்கினார். மூன்று அமர்வுகளிலும் முறையே வழக்கறிஞரும் மொழியாக்க வல்லுநருமாகிய திரு.அ.மதிவாணன், திருவாரூர் மாவட்டம், பூந்தோட்டம் பகுதியிலுள்ள ஸ்ரீலலிதாம்பிகை பதின்ம மேல்நிலைப்பள்ளியின் முதல்வர் திரு. முத்து ராஜா, வேலூர் மண்டிலக் கல்லூரிக் கல்வித் துணை இயக்குநர் முனைவர் க.எழிலன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

இந்த மூன்று அமர்வுகளிலும் தமிழகத்தின் பல மாவட்டங்களிலிருந்து மொத்தம் 24 தூயதமிழ் இளைஞர்கள் கலந்துகொண்டு “தூயதமிழ் பேசுவதில் இளையோர் காணும் சிக்கல்களும் தீர்வுகளும்” எனும் பொருண்மையில் தங்கள் கருத்தினைத் தெளிவாகவும் பிறமொழிக் கலப்பு இல்லாமலும் வெளிப்படுத்தினார்கள். அமர்வுகளில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி. ஜெ.சாந்தி நன்றி கூறினார். இந்த அமர்வுகளில் இலண்டன், துபாய், அபுதாபி, அமெரிக்கா, மொரீசியசு, மலேசியா உள்ளிட்ட பன்னாட்டுத் தமிழறிஞர்கள் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தனர்.


திரு. அ.மதிவாணன்


திரு. முத்து ராஜா


முனைவர் க.எழிலன்

## காணொலியில் கருத்து முழக்கம்!



க. ஆஷா, காரைக்குடி, சிவகங்கை மாவட்டம்.

இனிவரும் காலங்களில் கல்விக் கூடங்களில் தூயதமிழ் முழுமையாக இடம்பெறும் வகையில் பேச்சுப்போட்டி, கட்டுரைப்போட்டி போன்றவற்றுடன் தூயதமிழ்க் கருத்தரங்கங்களும் நடத்தப்பட்டால் இளைஞர்களிடையே தூயதமிழ் பேசுவதற்கான ஆர்வம் உண்டாகும்.



சே.புவன்குமார், திருவண்ணாமலை மாவட்டம்

இன்றைய சூழலில் குழந்தைகளுக்கு முறையான தமிழ்ப்பயிற்சி இல்லாதது மிகப்பெரிய சிக்கலாக உள்ளது. சரியான முயற்சியும் அதற்கான பயிற்சியும் இருந்தால் தூயதமிழில் பேசுவது எளிமையாக இருக்கும். பள்ளி–கல்லூரி மாணவர்களுக்கு இதுகுறித்து விழிப்புணர்வு ஏற்படுத்துவதன் மூலம் அவர்களிடையே புரிதலை ஏற்படுத்த முடியும்.



மே.மு.மணிமாறன், திருவள்ளூர் மாவட்டம்

தூயதமிழ் பேசுதல் மற்றும் தமிழ் படித்தலால் வேலைவாய்ப்புக் குறைகிறது எனும் மனக்கண்ணோட்டத்தை மாற்றி தானே தன் வேலைவாய்ப்பை உருவாக்கிக் கொண்டு, நல்ல தலைமைப்பண்பைத் தூயதமிழ்ச்சொற்களைக் கையாளுவதன் மூலமும் பெறலாம் என்பதைக் கருத்தில் கொண்டு செயல்படுதல் வேண்டும்.

சா. இலக்கியா, புதுக்கோட்டைமாவட்டம்.



இங்குச் சிக்கல் என்னவென்றால் பிறமொழிக் கலவாத தமிழ்ச்சொற்களைப் பலரால் புரிந்துகொள்ள இயலவில்லை. புரிந்துகொள்ள இயலாததால் பேசவும் இயலவில்லை. ஆங்கிலமொழி என்பது வேலை நிறுவனங்கள் மற்றும் கல்வி நிறுவனங்களுக்கு இன்றியமையாததாக இருந்தால், அங்கு மட்டும் ஆங்கிலத்தில் பேசிவிட்டு வீடுகளில், நண்பர்களிடத்தில் மற்றும் ஆங்கிலமொழி கட்டாயமில்லாத இடங்களில் எல்லாம் பிறமொழிக் கலவாத தமிழ்ச்சொற்களைப் பேசலாம்.



ர.பால ஸ்ரீகரன், திருநெல்வேலி மாவட்டம்.

ஊடகத்துறையில் பணியாற்றும் அனைவருக்கும் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தும் முறையினைக் கற்பித்தல் வேண்டும். இப்படிச் செய்தால் ஊடகத்துறையினர் வழியாக மக்களுக்குத் தூயதமிழ்ச் சொற்கள் குறித்த புரிதல் ஏற்படும்.

செ.அழகர் (எ) அழகுவேல், விழுப்புரம் மாவட்டம்.



(திரைப்படத் துணை இயக்குநர், மென்பொறியாளர்)

தரவு மேலாண்மையில் ஆங்கிலமொழியே பெரும்பான்மையான பங்கு வகிக்கிறது. அதை மாற்ற கணினிப்பொறியாளர்கள் தரவுதளத்தைத் தமிழில் மீளுருவாக்கம் செய்து தமிழைக் கணினி மேலாண்மைத் தளத்தில் செழிப்புறச் செய்ய வேண்டும்

பூ.கீர்த்தனா, பெரம்பலூர் மாவட்டம்.



வெளிமாநிலத்திலோ அல்லது தமிழ்நாட்டிலோ உருவாக்கப்பட்ட பொருட்களாக இருப்பினும் அப்பொருள்களின் பெயர்கள் தமிழில் இருப்பதில்லை. அவ்வாறு தமிழில்இருந்தாலும் அவை ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்துகள் கொண்டு பொறிக்கப்பட்டிருக்கும். அந்நிலை மாறினால் நாள்தோறும் நாம் பயன்படுத்தும் பொருட்களைக் கொண்டு தமிழில் உரையாட வாய்ப்புகள் அமையும்.

த.தங்கமுத்து, தருமபுரி மாவட்டம்.



பள்ளி–கல்லூரி வளாகங்களில் தூயதமிழ் பேசும் மாணவர்களுக்கு அக மதிப்பெண்ணில் 5 மதிப்பெண் வழங்கலாம். அரசு நடத்தும் போட்டித்தேர்வுகளில் தூயதமிழ்ச் சொற்களைக் கண்டுபிடித்தல் என்கின்ற வினாக்களை வைக்கலாம். அரசு மற்றும் தனியார்துறைகள் வேலைவாய்ப்பிற்காக நடத்தும் நேர்முகத்தேர்வில் தூயதமிழ் பேசுபவர்களுக்குச் சிறப்பு மதிப்பெண் வழங்கலாம். இவ்வாறெல்லாம் செய்தால் உறுதியாகப் பலபேர் தூயதமிழ்ச் சொற்களை அறிந்து கொண்டு தூய தமிழில் பேசுவார்கள்

மு. சந்தோஷ்குமார், கிருட்டினகிரி மாவட்டம்.



sir என்ற சொல்லுக்கு S-Slave I-I R-Remain என்பதே முழுமையான பொருளாகும். இதனுடைய தமிழ்ப்பொருள் “நான் உங்களின் அடிமை” என்பதாகும். நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள் நாம் யாருக்கும் அடிமை இல்லை. இன்று முதல் sir என்று அழைக்காமல் ஐயா என்று தமிழ்மொழியில் அழையுங்கள். மாற்றத்தை விரும்புபவர்கள் முதலில் நாம் மாற வேண்டும்.

ஜோ.கேத்ரின் மெர்லினா, திண்டுக்கல் மாவட்டம்.



பள்ளி முதல்வகுப்பில் ஒரு மாணவனுக்கு விதைக்கப்படும் விதை தான் பெருமரமாக வளர்ந்து பயன்தருகிறது. ஆகவே இனிவரும் காலங்களில் முதல் வகுப்பில் இருந்தே தூயதமிழில் பேச மாணவர்களுக்கு வழிகாட்டவும் ஒலிப்புமுறையைச் சரியாகச் சொல்லிக் கொடுக்கவும் முயற்சிக்கலாம். தூயதமிழில் பேசவேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டால் இளைஞர்களுக்குத் தூயதமிழில் பேசுவதில் சிக்கல் ஏற்படாது.

நீ.மிருதுளா, செங்கல்பட்டு மாவட்டம்.



கல்வி என்பது அறிவை வளர்க்கவே. இது தாய்மொழியில் அமைந்தால் தான் சிறப்பாக இருக்கும் என்பதையும், தமிழன் தமிழில் பேசுவதே தகுதி, மதிப்பு என்பதையும் உணர வேண்டும். எந்த மொழிக்கும் இல்லாத பொருளாழமும் நயமும் தமிழில்தான் உள்ளன என்பதை உணர்ந்தால் தூயதமிழில் தெளிவாகப் பேசும் காலம் வரும்.

ச.ஜெகன் கிறிஸ்ட் , தஞ்சாவூர் மாவட்டம்.



நம் நாட்டில் உள்ள அனைத்து வழிபாட்டுத் தளங்களிலும் தமிழ் இடம்பெற வேண்டும்.ஏனெனில் வழிபாடு தான் ஒருவரின் வாழ்வில் முகாமையான பங்கு வகிக்கிறது. அரசியல் தலைவர்கள், அமைச்சர்கள், அரசு அதிகாரிகள், நடிகர்– நடிகைகள் என அனைவரும் ஒரு பேட்டியோ, அறிக்கையோ, வெளியிடும் போது அதனைத் தூயதமிழில் வெளியிடவேண்டும். இதனால் அவர்களைப் பின்பற்றும் அவர்களின் தொண்டர்களும், விசிறிகளும் அந்தவழியிலேயே சென்று தூயதமிழைக் கற்க ஆர்வம் கொள்வர்.

த. பிரியங்கா, நீலகிரி மாவட்டம்.



நான் மருத்துவத்துறை சார்ந்த மாணவி. பொதுவாக மருத்துவக் கல்லூரிகளில் தமிழ் சார்ந்த பாடங்கள் கிடையாது. இதனால் தூய தமிழில் பேசுவதற்கு மட்டும் அல்ல தமிழ்ப்பற்று உள்ளவர்கள் தமிழ் சார்ந்த போட்டிகளில் கலந்து கொள்வதற்கும் இன்னல்பட வேண்டியுள்ளது.

மருத்துவக் கல்லூரிகளிலும் தமிழ்ப் பாடங்களைப் புகுத்தினால் தூயதமிழ் பேசுவதில் இளையோர் காணும் சிக்கல்களுக்கு ஒரு தீர்வாக இருக்கும். அங்காடிகளிலும் பொது இடங்களிலும், பிறமொழிச்சொற்கள் கலவாமல் தூயதமிழில் பேசினால் நாம் முன்னேற்றம் காணலாம்.

ப. தாயுமானவர், அரியலூர் மாவட்டம்.



உலக மொழிகளுக்கு இல்லாத தனிச்சிறப்பு தமிழ்மொழிக்கு உண்டு. ஆம், அ – அம்மா, ஆ – ஆடு என்று படித்திருப்போம். A - apple என்று ஆங்கிலத்தில் படித்திருப்போம். உணவிலிருந்து தொடங்குவது வேற்றுமொழி, உணர்விலிருந்து தொடங்குவதுதான் தமிழ்மொழி.

இவற்றையெல்லாம் உணர்ந்து, உணவுப் பொருளில் கலப்படம் என்றால் சினங்கொள்ளும் நாம் நம் தாய்மொழியில் கலப்படம் என்றால் சினங்கொண்டு அதனைக் களைய முயற்சிசெய்ய வேண்டும்.

ஜே.டெல்பின், கன்னியாகுமரி மாவட்டம்.



தமிழ்நாட்டில் தமிழ்வழிக் கல்வி கற்பவர்களுக்கு வேலைவாய்ப்பிலும் படிப்பிலும் 80 விழுக்காடு இடஒதுக்கீடு செய்ய வேண்டும். பள்ளிக் கூடங்களில் பிறமொழிகள் பேசினால் தண்டம் விதிக்கும் சூழ்நிலை உருவாக வேண்டும். தமிழ்நாட்டில் எல்லா நிறுவனங்களிலும், எல்லாக் கடைகளிலும் தமிழில் பெயர்ப்பலகை வைக்க வேண்டும். தூயதமிழ் குறித்த விழிப்புணர்வு நாடகங்கள் சிற்றூர்கள்தோறும் நடத்தப்பட வேண்டும்.



இரா.வெற்றிவேல், காஞ்சிபுரம்மாவட்டம்.

தமிழ் ஊடகங்கள் மட்டுமாவது தமிழில் இயங்க ஆணையிட வேண்டும். தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தைக் கடுமையாக்க வேண்டும். இவற்றால் மக்கள் மனதில் மறுமலர்ச்சி எழுதல் வேண்டும்.

அலுவலக நடைமுறைக் கோப்புகள், ஆணைகள் ஆகியனவற்றில் தமிழை நூறு விழுக்காடு பயன்படுத்துவதை உறுதிப்படுத்தவேண்டும். அனைத்து ஆங்கிலச் சொற்களுக்கும் இணையான தமிழ்ச்சொற்கள் உடனுக்குடன் மொழிபெயர்ப்புச் செய்யப்பட வேண்டும்.

ப. ஹரிணி, இராணிப்பேட்டை மாவட்டம்.



பள்ளிகளில் ஒவ்வொரு மாணவருக்கும் அவரவர் பயிலும் வகுப்பிற்கு ஏற்றவாறு தமிழ் அகராதி நூல்களை அளித்தல் வேண்டும். அரசு அதிகாரிகள், தன்னார்வலர்கள், தமிழ்ச்சான்றோர்கள் தங்கள் வாழ்வில் தமிழால் ஏற்பட்ட மாற்றங்களைப் பற்றி இளம்தலைமுறையினரிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

இர. மோனிஷா, மயிலாடுதுறை மாவட்டம்.



அரசு பள்ளிகளில் மட்டுமல்லாமல், தனியார் பள்ளிகளிலும் தூயதமிழ் பேச வேண்டும் என்கின்ற எண்ணத்தை மாணவர்களின் மனத்தில் விதைக்க வேண்டும். அதற்கு நிலைக்கு ஒன்றாகச் சொற்குவியல் பெட்டிகளை உருவாக்கலாம். இப்பெட்டிகள் உண்மையிலேயே சொற்களஞ்சியமாக விளங்க வேண்டும் .

அதற்கு அந்தப் பெட்டிகளைப் பேணிக் காக்கும் பொறுப்புகளையும் மாணவர்களிடமே ஆசிரியர்களின் மேற்பார்வையில் விட வேண்டும். அப்படிச் செய்யும் பொழுது தொடக்கக் கல்வி பயிலும் மாணவர்களுக்கு எளிய இணைச் சொற்களைத் தேடும் பயிற்சியும், உயர்கல்வி மாணவர்களுக்குச் சற்றுக் கடினமான இணைச்சொற்கள், புதிய சொற்களை உருவாக்கும் பயிற்சியும் அளிக்கலாம்

கு.மகாலட்சுமி, திருவாரூர் மாவட்டம்.



பெயரின் முன்னெழுத்தை ஆங்கிலத்திலும் பெயரைத் தமிழிலும் எழுதுவதில் தொடங்குகிறது பிறமொழிக் கலப்பு. ஆங்கிலத்தை முழுக்க முழுக்க ஆங்கிலத்திலேயே நடத்தும் ஆசிரியர்கள்கூட உள்ளனர்.

ஆனால், தமிழ்ப் பாடத்தைத் தூயதமிழில் நடத்தும் ஆசிரியர்கள் உள்ளனரா என்பது கேள்விக்குறியே. சிறந்த தமிழாசிரியர்களாலேயே தூயதமிழ் மாணவர்களை உருவாக்க முடியும்.

ஜெ.லோகேஸ்வரன், நாமக்கல் மாவட்டம்.

எழுத்துத் தமிழ் கற்பிக்கும்போது அதற்கென ஒரு வரையறையான இலக்கணம் இருப்பதால் எளிதாகிறது. ஆனால் பேச்சுத் தமிழுக்கு அத்தகைய இலக்கணம் இல்லாதது ஒரு குறையாகவே தோன்றுகிறது .



மேலும் பேச்சுத்தமிழ் பலவகை வட்டார வழக்குகளை உள்ளடக்கியுள்ளதால் எந்த வழக்கில் கற்பிப்பது என்பது ஒரு கேள்வி. பொதுநிலையான பேச்சு மொழியைக் கற்பிக்கலாம் என முடிவு செய்து,

முதலில் பேச்சுவழக்கினைக் கற்பித்த பின்னர் எழுத்துவழக்கினைக் கற்பிக்கலாம். பேச்சு வழக்கினைக் கற்பிக்கும்போது பொதுவாழ்க்கைச் சூழல்கள் பலவற்றை நடுவாகக் கொண்டு கற்பிப்பதே சிறந்த முறையாகத் தோன்றுகிறது.



கு.கயல்விழி, கடலூர் மாவட்டம்.

இன்றைய சூழலில் இளையோருக்குத் தமிழ் எது? தூயதமிழ் எது? என்று கண்டறிவதே கடினம். இச்சிக்கலைத் தமிழ் சார்ந்த அமைப்புகளும், தமிழ் ஆசிரியர்களும், தமிழக அரசும் களமிறங்கிக் களைந்திட வேண்டும்.

தமிழகத்தில் உள்ள அனைத்துப் பள்ளிகளிலும் தமிழ் விருப்பப் பாடம் என்பதனை மாற்றி கட்டாயப் பாடமாக நடைமுறைப்படுத்த வேண்டும். இளையோரை அதிகம் ஈர்க்கும் திரைப்படங்களில் இடம்பெறும் திரைக்கதை, உரையாடல் மற்றும் பாடல்களில் வரும் தமிழற்ற சொற்களைத் திரைப்படத் தணிக்கைக் குழு தணிக்கை செய்யவேண்டும்

அ.அழகுலெட்சுமி, தூத்துக்குடி மாவட்டம்.



தூயதமிழில் பேசுவதற்கான முயற்சியை நம் வீட்டில் இருந்தே தொடங்கலாம். நாள்தோறும் நாம் பயன்படுத்தும் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை ஆய்ந்தறிந்து பயன்படுத்தலாம். வணிக நிறுவனங்களில் பணிபுரியும் பணியாளர்கள் வாடிக்கையாளர்களிடம் இயல்பான தூயதமிழில் பேசுவதை வழக்கப்படுத்திக் கொள்ளலாம்.

காவல்துறைக் கட்டளைச் சொற்கள், பதிவுகள், அறமன்றத் தீர்ப்புகள், அரசு அறிவிப்புகள் போன்றவைகளைத் தூயதமிழில் வெளியிட வழிவகை செய்யலாம். நம் இல்லங்களில் நடைபெறும் திருமணச் சடங்குகள் அனைத்தையும் தமிழ் முறையிலேயே நடத்தலாம்.

ம.ஜ.சந்தீப் (எ) தூயவன், குடியேற்றம், வேலூர் மாவட்டம்.



முதலில் பெற்றோர்கள் விழிப்படைய வேண்டும். பிள்ளைகளுக்குத் தாய்மொழிக் கல்வியைக் கொடுப்பதற்கு முன்வர வேண்டும். அதில் இருக்கக்கூடிய பயன்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். பிள்ளைகளுக்கு நல்ல தமிழிலேயே பெயரிட்டுப் பெருமையடைதல் வேண்டும்.நமக்குத் தெரிந்த தமிழ்ச்சொற்களைப் பிறருக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். குமுக ஊடகங்களில் தமிழிலேயே கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளுதல் வேண்டும்

த.பிரியதர்ஷினி, சேலம் மாவட்டம்.



மாநில மொழியில் தான் கல்வி கற்கவேண்டும் என்பதை உறுதிசெய்ய வேண்டும். தமிழகம் சார்ந்த போட்டித் தேர்வுகளில் தமிழைக் கட்டாயமாக்க வேண்டும். ஆங்கில வழியில் எழுதுவோருக்கும் ஒரு சிறு பகுதியாவது தமிழ் சார்ந்து கட்டாயமாக இருத்தல் வேண்டும்.

தமிழ் படித்தால் தமிழாசிரியர் மட்டும்தான் ஆக முடியும் என்ற எண்ணத்தைத் தாண்டி நல்ல பலுக்கல்திறன் கொண்டவர்கள் வானொலி மற்றும் தொலைக்காட்சியில் செய்திவாசிப்பாளராகலாம்.

மேலும், மொழிபெயர்ப்புத் துறை, படைத்துறை, மொழிநடை திருத்துநர், கலைச்சொல் வல்லுநர், போன்ற துறைகளிலும் வாய்ப்புகள் உள்ளன என்பது குறித்து மாணவர்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும்.

தூயதமிழ் இளைஞர்கள் பேசிய கருத்துரைகளைச்
சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தின் காட்சியகப் பக்கத்திலும்,
வலையொளியிலும் (Youtube) காணலாம்.

# தூயதமிழ் மாணவர்களின் செயற்பாட்டை அகரமுதலி இயக்ககம் கண்காணிக்க வேண்டும்!

## – மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் வலியுறுத்தல் !

# தமிழ்மொழியின் பாதுகாப்பே இன்றைய தேவை ! தமிழ்ப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் பேச்சு!



முனைவர்
ச.கண்ணப்பன்
இயக்குநர்
பள்ளிக்கல்வித்துறை



முனைவர்
கோ.பாலசுப்ரமணியன்
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்



முனைவர்
மு.கிருட்டினன்
துணைவேந்தர்
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்



முனைவர்
வி.ஜி.சந்தோசம்
தலைவர்
வி.ஜி. பி. உலகத் தமிழ்ச்
சங்கம், சென்னை

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவை தூயதமிழ் இளையோர் பாசறை இணைந்து தூயதமிழ் பேசும் மாணவர்களை ஊக்கப்படுத்தும் வகையில், கொரோனா ஊரடங்கு காலத்திலும் 63 நாள்களாக நடத்திய இணையவழி மெய்ந்நிகர் கருத்தரங்கத்தின் 5 அமர்வுகளில் 38 மாவட்டங்களைச் சேர்ந்த 44 மாணவ–மாணவிகள் பங்கேற்று, ‘தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும் தீர்வுகளும்’ என்னும் தலைப்பில் கருத்துரை வழங்கினார்கள்.

இந்த இணையவழி மெய்ந்நிகர் கருத்தரங்கத்தின் நிறைவு விழா 16.08.2020 ஞாயிறன்று நடைபெற்றது. விழாவில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் அனைவரையும் வரவேற்று நோக்கவுரையாற்றினார். சென்னை வி.ஜி.பி.உலகத் தமிழ்ச் சங்கத் தலைவர் முனைவர் வி.ஜி.சந்தோசம் அவர்கள் தமது வாழ்த்துரையில், ‘என்னால் முடியும்’, ‘நம்மால் முடியும்’ என்று மாணவர்கள் நம்பினால் அவர்களால் அனைத்தையும் வெல்ல முடியும் என்றும், மாணவர்கள் தூயதமிழ்ச் சொற்களை முதலில் மனத்தில் உள்வாங்கிக் கொண்டால் இயல்பாகத் தூயதமிழில் பேசமுடியும் என்றும் தெரிவித்தார்.

விழாவில் பங்கேற்று ஊக்கவுரையாற்றிய தமிழ்நாடு அரசு பள்ளிக்கல்வித் துறை இயக்குநர் முனைவர் ச.கண்ணப்பன் அவர்கள், மாணவ–மாணவியர் வேலைவாய்ப்பு உள்ளிட்ட காரணங்களுக்காக ஆங்கிலம் உள்ளிட்ட பிறமொழிகளைக் கற்றுக்கொண்டாலும், தாய்மொழியாகிய தமிழ்மொழியின் மீதான பற்றே அவர்களின் உள்ளுணர்வாக இருக்க வேண்டும் என்று தெரிவித்தார்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தராகிய முனைவர் மு.கிருட்டினன் அவர்கள் தமது ஊக்கவுரையில், தூயதமிழ் மாணவர்கள் இந்தக் கருத்தரங்கத்தோடு தூயதமிழில் பேசுவதை நிறுத்திவிடாமல், தொடர்ந்து தூயதமிழில் பேசவேண்டும். அத்துடன், தங்களின் பெற்றோர், உறவினர்களையும், தாங்கள் வாழும் ஊரில் உள்ளோரையும் தூயதமிழில் பேசுவதற்கு ஊக்குவிக்க வேண்டும் என்றும், தூயதமிழ் மாணவர்களின் இந்தச் செயற்பாட்டை அரசும் அகரமுதலி இயக்ககமும் தொடர்ந்து கண்காணிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

விழாவில் பங்கேற்று ஊக்கவுரையாற்றிய தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் அவர்கள்,

மொழிக்கலப்பின்றிப் பேசுவதே தாய்மொழிக்கு நாம் செய்யும் முதல் தொண்டு என்றும், தற்போதைய சூழலில் தமிழ்மொழியின் வளர்ச்சியில் இடர்ப்பாடு இல்லை என்றும் தமிழ்மொழியின் பாதுகாப்பில்தான் இடர்ப்பாடு உள்ளது என்றும் தெரிவித்தார். இத்தகைய இடர்ப்பாடுகளைக் களைய நல்ல இயல்பான தூயதமிழில் பேசுவதற்கான விழிப்புணர்வை மக்களிடையே ஏற்படுத்தவேண்டும் என்றும் கூறினார்.

ஏற்கெனவே நடைபெற்ற 5 அமர்வுகளில் பங்கேற்ற 44 மாணவ–மாணவியர் சார்பில் நிறைவு விழாவில் யூ.அஸ்வத் பெனாசீர், க.ஆஷா, சா.இலக்கியா, த.தங்கமுத்து ஆகிய நான்குபேர் பங்கேற்றுக் கருத்துரை வழங்கினார்கள். மாணவர்கள் தங்கள் கருத்துரையின்போது அரசிடம் சில கோரிக்கைகளையும் முன்வைத்தார்கள். அக்கோரிக்கைகளாவன:

❖ வருங்காலத்தில் நிறைய தூயதமிழ் மாணவர்கள் உருவாவதற்கு அடித்தளமாக முதலில் தமிழகத்திலுள்ள தொடக்கப்பள்ளித் தமிழாசிரியர்களுக்குத் தூயதமிழ்ப் பயிற்சியைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் பள்ளிக் கல்வி இயக்ககத்துடன் இணைந்து நடத்த வேண்டும்.

❖ செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககத்தின் பெயரைக் காலத்திற்கேற்பவும், மாணவ–மாணவியருக்கும் மக்களுக்கும் எளிதில் புரியும் வகையிலும் சுருக்கமாக மாற்றியமைக்க வேண்டும்.

❖ உலகத் தமிழர்கள் அனைவருக்கும் தமிழ்ச் சொற்கள் குறித்தோ, ஒருபொருளுக்குப் பல கலைச்சொற்கள் உருவாக்கப்படும் நிலையில் எந்தக் கலைச்சொல்லைப் பயன்படுத்துவது என்பது குறித்தோ ஐயம் ஏற்பட்டால் அதனைத் தீர்த்து வைக்கும் தீர்ப்பாயமாக அகரமுதலி இயக்ககம் செயல்படும் வகையில் அதன் செயற்பாட்டு எல்லையை விரிவுசெய்து அரசு அதிகாரம் அளிக்க வேண்டும்

❖ இன்றைய இளைஞர்களை அதிகம் ஈர்க்கும் திரைப்படத்துறையிலும் பெண்களை அதிகம் ஈர்க்கும் சின்னதிரையிலும் உரையாடல், பாடல்களைத் தூயதமிழில் அமைக்க வகைசெய்ய வேண்டும். குறிப்பாக, திரைப்படத் தணிக்கைத் துறையில் அகரமுதலி இயக்ககத்தின் இயக்குநரை ஓர் உறுப்பினராக அரசு சேர்க்க வேண்டும்

❖ அச்சு (ம) காட்சி ஊடகங்கள் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களை மாணவர்களாகிய நாங்கள் நேரடியாக அவர்களிடம் எடுத்துச் சொல்ல முடியாததால், அகரமுதலி இயக்ககம் வழியாக அதனை எடுத்துச் சொல்லுவதற்கு அரசு ஆவன செய்ய வேண்டும். இப்பணியைச் செய்யும் மாணவர்களை ஊக்குவிக்கும் வகையில் பரிசுகளும் பாராட்டுச் சான்றிதழ்களும் வழங்கலாம்.

❖ தமிழ்மொழியின் சொற்களையும் அவற்றின் பொருள்களையும் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவதற்கு அகராதிகள்தான் முதல் துணை என்பதால், பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குக் குறைந்த விலையில் தமிழ்–தமிழ் அகராதிகளை அகரமுதலி இயக்ககம் சார்பில் வழங்குவதற்கு அரசு வழிவகை செய்ய வேண்டும்

❖ அரசு (ம) அரசு உதவிபெறும் பள்ளி–கல்லூரிகளுக்கு அகரமுதலி இயக்ககத்தின் வெளியீடுகளான அகராதிகள் அனைத்திலும் ஒவ்வொன்றை இலவயமாக வழங்குவதற்கு அரசு ஆவன செய்யவேண்டும்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி ஜெ.சாந்தி அவர்கள் நிகழ்வை ஒருங்கிணைக்க, கோவை–தூயதமிழ் இளையோர் பாசறைத் தலைவர் திரு. சி. மணிகண்டன் விழாவில் பங்கேற்ற அனைவருக்கும் முறையாக நன்றிகூறினார்.

## தமிழ்ச் சொல்வளம்

மரக்கல வகை

புணை = நீரில் மிதக்கும் கட்டை

தெப்பம் = பல மிதப்புக் கட்டைகளின் சேர்க்கை

கட்டுமரம் = இருகடையும் வளைந்த மரக்கட்டு

தோணி = தோண்டப்பட்ட மரம் போல்வது

ஓடம் = வேகமாய்ச் செல்லும் தட்டையான தோணி

திமில் = திரண்ட மீன்படகு

"திண்டிமில் வன்பரதவர்" (புறம்.24)

பஃறி = பன்றி போன்ற வடிவமுள்ள தோணி

பரிசில் = வட்டமான பிரம்புத் தோணி

அம்பி = விலங்குமுகம் அல்லது பறவைமுகம் போன்ற முகப்பையுடைய மரத்தோணி

படகு = பாய் கட்டிய தோணி

நாவாய் = நீரைக் கொழித்துச் செல்லும் போர்க்கலம்

கப்பல் = பலவாய் கட்டி வணிகச் சரக்கேற்றிச் செல்லும் பெருங்கலம்

–நன்றி: பாவாணர் தமிழ்க் களஞ்சியம்–21

# பொருள் மாறிய பழமொழிகள்

ஒரு செய்தி ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் போகும்போது பலவகையில் மருவிவிடும். அதிலும் முன்னோர்களின் பட்டறிவு மொழியான பழமொழிகள் காலங்காலமாக மருவி வந்துள்ளன. மக்கள் தம் விருப்பம் போல் கருத்துக்கு வலுசேர்க்க பழமொழிகளைச் சான்றாகப் பயன்படுத்தியுள்ளனர்.

பின்னாளில் இந்த மருவிய பழமொழிகளே மக்களின் பட்டறிவு மொழிகளாகின. அவ்வாறு மருவிய பழமொழிகளின் உண்மையான பொருள்களைத் தெரிந்து கொள்வோம்.

''அடி உதவுவது போல் அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்'' என்ற பழமொழியை மற்றவர்களை அடித்துத்தான் பணிய வைக்க முடியும் என்ற கருத்தில் பயன்படுத்தி வருகிறோம். ஆனால் இங்கு அடி என்பது இறைவனின் திருவடியைக் குறிக்கிறது.

வள்ளுவரும் கடவுள் வாழ்த்தில் ஏழு திருக்குறள்களில் இறைவனின் திருவடியைப் பற்ற வேண்டும் என்று கூறியுள்ளார். இறைவனின் திருவடி உதவுவது போல் அண்ணன் தம்பி கூட உதவ மாட்டார்கள் என்பதுதான் இதன் உண்மையான விளக்கம் ஆகும்.

''பகையாளிக் குடியை உறவாடிக் கெடு'' என்ற பழமொழி நமக்குப் பிடிக்காதவர்களிடம் பொய்யாகப் பழகி அவர்களைப் பழிவாங்க வேண்டும் என்று கூறுவதுபோல் உள்ளது. ஆனால் நம் முன்னோர்கள் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற உயரிய கொள்கையில் வாழ்ந்தவர்கள். அவர்கள் பகைவரை அழிக்க உறவுமுறை கொண்டாடவில்லை. இரு நாடுகளுக்கான பகையை அழிக்க உறவை ஏற்படுத்தியுள்ளனர்.

முந்தைய அரசாட்சிக் காலத்தில் இரு நாடுகளுக்கிடையில் அவ்வப்போது போர் நிகழும். சில அரசர்கள் போரைத் தடுப்பதற்காக மதிநுட்பத்துடன் எதிரிநாட்டு அரசக்குடும்பத்தோடு பெண் கொடுத்தோ, பெண் எடுத்தோ உறவை ஏற்படுத்துவார்கள். அதனால் ''பகையாளிக் குடியில் உறவை உண்டாக்கி, பகையைக் கெடு!'' என்பது தான் உண்மையான பழமொழி விளக்கம் ஆகும்.

''ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்'' என்ற பழமொழி, ஆயிரம் பேரைக் கொன்றால் தான் குறைந்தபட்சம் மருத்துவனாக முடியும் என்று கூறுவதாக உள்ளது. மேலும் உயிர் காக்கும் மருத்துவர்களை இழிவுபடுத்துவதாகவும் உள்ளது. இந்தப் பழமொழியில் வேர் என்பது பேர் என மருவியுள்ளது. நாட்டு மருத்துவர்கள் பல்வேறு மூலிகைகளின் வேர்களை அரைத்து, ஆராய்ச்சி செய்து, நோய்களைத் தீர்க்கும் மருந்துகளைக் கண்டறிந்தனர். அதனால் ''ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை வைத்தியன்'' என்று கூறப்பட்டான்.

''பந்திக்கு முந்தி படைக்குப் பிந்தி'' என்ற பழமொழி விருந்துக்கு விரைவாகவும் போருக்கு மெதுவாகவும் செல்ல வேண்டும் என்று கூறுவது போல் உள்ளது. விருந்தோம்பலிலும் வீரத்திலும் சிறந்து விளங்கிய நம் தமிழர்கள் இவ்வாறு கூறியிருக்க மாட்டார்கள்.

விருந்து ஏற்பாடு செய்வதற்கு முன் அடுப்பில் விறகை வைத்து நெருப்பை ஏற்றுவார்கள். சமைத்தப் பிறகு பந்தி வைத்துப் பரிமாறுவார்கள். அதனால் தான் 'பந்திக்கு முன் தீ' என்று கூறியுள்ளனர். அதேபோல் தன் எதிரி நாட்டை வென்ற மன்னன் வெற்றிக்குப் பிறகு அந்த நாட்டைத் தீயிட்டு முழுமையாக அழித்து விடுவான். அதனால் தான் 'படைக்குப் பின் தீ' என்று கூறியுள்ளனர்.

''குரைக்கிற நாய் கடிக்காது'' என்ற பழமொழி, அறிமுகம் இல்லாதவரைக் கண்டு குரைக்கக்கூடிய நாய் கடிக்காது என்று கூறுவதாக உள்ளது. அமைதியாக இருக்கும் நாய் தான் கடிக்கும் என்றும் குரைக்கின்ற நாய் கடிக்காது என்றும் நம்மில் பலர் நினைக்கின்றனர். ஆனால் நாய் எப்போது வேண்டுமானாலும் கடித்துவிடும் தன்மை கொண்டது.

நாய் நன்றி உணர்ச்சி மிக்கது. பழகியவர்களைக் கண்டால் தன் உடலைக் குழைத்து விளையாடும். அதனால் நம்மைக் கண்டு நன்றியுணர்ச்சியுடன் ''குழைகின்ற நாய் கடிக்காது'' என்றே நம் முன்னோர்கள் கூறியிருக்க வேண்டும்.

இவ்வாறு பழமொழிகள் காலப்போக்கில் பல்வேறு மாற்றங்களைச் சந்தித்து, முன்னோர்கள் கூறிய பொருள் சிதைந்து மருவியுள்ளன. ''மெய்ப்பொருள் காண்பது அறிவு'' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க மருவிய பழமொழிகளின் உண்மையான பொருள்களை அறிந்து பயன்படுத்துவோம்.


வெ.சோழராஜா
முதுகலைத் தமிழாசிரியர்
அரசு மேல்நிலைப்பள்ளி
ஆவியூர், விருதுநகர்

# பழந்தமிழரின்

## சூழலியல் அறிவு

தமிழினத்துக்கும் தமிழ்மொழிக்கும் பெருமை சேர்க்கக்கூடிய கழக (சங்க) இலக்கியம் முழுமைக்கும் தமிழரின் வாழ்வியல் சிந்தனைகள் நிரம்பிக் காணப்படுகின்றன. அவற்றுள் சூழலியல் சார்ந்த பழக்கவழக்கங்களுள் ஒருசிலவற்றை மட்டும் சுட்டியுரைப்பதாகப் பின்வரும் பகுதி அமைகின்றது.

**தூய்மை பேணல்**

ஆடைகளைத் துவைத்துத் தூய்மையாக அணிந்ததை,

“கல்தோய்த்து உடுத்த படிவ பார்ப்பான்” (முல்லை.37)

என்கிறது முல்லைப்பாட்டு.

அழுக்கான ஆடையுடன் வரும் விருந்தினர்களுக்குப் புதிய, தூய்மையான ஆடைகள் தரப்பட்டதை,

“ ஈரும் பேனும் இருந்து இறைகூடி
வேரொடு நனைந்து வேற்றுஇழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி அன்ன அறுவை நல்கி” (பொருந.79–83)

என்றும்

“துன்னற் சிதாஅர் நீக்கி தூய
கொட்டைக் கரைய பட்டுடை நல்கி” (பொருந.154–155)

என்றும் பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார் குறித்துள்ளார்.

“நீ சில மொழியா அளவை மாசுஇல்
காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ”(சிறுபாணா.235–236)

என்று சிறுபாணாற்றுப்படையும் இதனை உறுதி செய்கிறது.

“புகை முகந்தன்ன மாசுஇல் தூஉடை” (முருகு.238)

என்கிறது திருமுருகாற்றுப்படை.

முனிவர்கள் தவம் செய்யும் இடங்களிலுள்ள குப்பைகளைக் குரங்குகள் நீக்கித் தூய்மை செய்யும் என்பதை,

“கலைபாய்ந்து உதிர்த்த மலர்வீழ் புறவின்
மந்தி சீக்கும்” (பெரும்பாணா.496–467)

என்கிறது பெரும்பாணாற்றுப்படை. இது கற்பனை என்றாலும் சுற்றுப்புறத் தூய்மையாக்கலுக்கான விழிப்புணர்வாக இதனைக் கொள்ளலாம்.

நோய் பரப்பும் நுண்ணுயிரிகளை அழிக்கும் வல்லமை வேம்பிற்கு உண்டென்பதை அறிந்து அதனை நுண்ணுயிரிக் கொல்லியாகவும் (கிருமிநாசினி) தமிழர்கள் பயன்படுத்தி உள்ளனர்; தற்போதும் பயன்படுத்தி வருகின்றனர். நோய்த் தாக்காமல் இருக்க வீட்டின் முன்பு வேம்பைச் செருகி வைத்திருந்ததை,

“தீங்கனி இரவமொடு வேம்புமனைச் சொரீஇ” (புறம்.281)

என்று கூறுகிறது புறநானூற்றுப்பாடல்.

**ஒலிமாசு – தவிர்த்தல்**

யாழிசை போன்ற இனிய ஓசைக்கு மயங்கும் என்றும், கடும்பறை போன்ற வல்லோசையைப்



பொறுக்காமல் உயிர்விடும் என்றும் தமிழிலக்கியங்களில் சொல்லப்படுகின்ற அசுணம் என்ற உயிரினம் ஒலிமாசு தவிர்க்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்கான ஒரு குறியீடாகவே பயன்படுத்தப்பட்டுள்ளது எனலாம்.

''அசுணம் கொல்பவர் கைபோல்'' (நற்.304)

''மணம் நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்'' (நற்.244)

**காற்று மாசும் மரவளர்ப்பும்**

காற்று மாசடைவதைத் தவிர்க்க நிறைய மரங்கள் வளர்க்கப்பட வேண்டும். மரங்களைத் தமிழர்கள் தெய்வமாக வணங்குவது இன்றும் உள்ள நடைமுறை வழக்கம். கோயில்களில் உள்ள கோயில் மரங்கள் (தலவிருட்சங்கள்) போன்று ஒவ்வொரு மன்னனுக்கும் 'காவல் மரம்' (அ) 'கடிமரம்' இருந்ததைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

போரில் வென்ற மன்னன் பகை நாட்டைத் தீயிட்டு எரிப்பதனால் எழும் புகை வானை மறைத்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. அந்தப் புகை 'அடா அடுபுகை' எனக் கூறப்பட்டது.

''நாடு கெட எரிபரப்பி'' (மதுரைக்.126)

''ஊர் சுடு விளக்கின் தந்த ஆயமும்'' (மதுரைக்.692)

இவை போன்ற பிற பதிவுகள் வளிமண்டலத்தைப் புகையாலும், பிற கழிவு வளிமங்களாலும் மாசுபடுத்தக் கூடாது என்ற நேர்மறை (Positive) உணர்வை எதிர்மறைச் (Negative) சொற்றொடர்களில் நமக்குப் புலப்படுத்து கின்றன.

மரங்கள் மண் அரிப்பைத் தடுக்கவும் பயன்படுகின்றன. அதனால் நீர்நிலைகளின் கரைகளில் பெரிய மரங்கள் நடப்பட்டிருந்தன என்பதை,

''மலையின் இழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரை மரம் சேர்ந்து'' (பரி.16)

என்கிறது பரிபாடல்.

''காற்றினைத் தூய்மை செய்''

''தெருவெலாம் மரம் வளர்''

இவை இரண்டும் பாரதிதாசனின் புதிய ஆத்திசூடி வரிகள்.

நல்ல காற்றோட்டமுள்ள வகையில் சாளரம் வைத்து வீடுகள், அரண்மனைகள் கட்டப்பட்ட செய்தியை நெடுநல்வாடை, மதுரைக்காஞ்சி உள்ளிட்ட நூல்கள்வழி அறியமுடிகிறது. இன்றைய சூழலில் பிள்ளைகள் பயிலக்கூடிய சில பள்ளிக்கூடங்கள்கூட இடநெருக்கடியில் உரிய ஏந்துகள் இன்றிக் கட்டப்பட்டிருப்பதைக் காண முடிகிறது.

**வீடு, தெருக்களின் தூய்மை**

ஒவ்வொரு வீடும் தூய்மையாக இருந்தால் தெரு தூய்மையாக இருக்கும். தெரு தூய்மையானால் ஊர் தூய்மையாகும். ஊர்த்தூய்மை உலகத் தூய்மையாக மாறும். பண்டைத் தமிழர்கள் தங்கள் இருப்பிடங்களைத் தூய்மையாக வைத்திருந்தனர். அவர்கள் தங்களின் வீடுகளில் ஆ (பசு)வின் சாணம் (கிருமி நாசினி) தெளித்து மெழுகினர் என்ற குறிப்புக் காணப்படுகிறது.

சான்று:

''பைஞ்சேறு மெழுகிய படிவநல் நகர்'' (பெரும்பாணா.298)

''மலரணி மெழுக்கும் ஏறிப் பலர் தொழ'' (பட்டின.247)

தூய்மையான தெருவை, 'ஆசுஇல் தெருவில்' எனக்குறிக்கிறது குறுந்தொகைப் (277) பாடல்.

**நீர் சேமிப்பும் மாசுதவிர்த்தலும்**

பண்டைத் தமிழர்கள் தத்தம் வீடுகளில் மழைநீர் சேமிப்பதற்கான வழிமுறைகளைக் கையாண்டனர் என்பதற்கு,

''நிலவுப் பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்துக்

கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறைய'' (நெடுநல். 95–96)

என்ற வரிகளே சான்று.

நீரைப் பாதுகாக்க அணைகள் கட்டப்பட்டிருந்ததை,

''பாறைப் பரப்பில் பரந்தசிறை நின்று'' (பரி.12)

''வரைச்சிறை உடைத்ததை வையை'' (பரி.6)

என்ற பரிபாடல் வரிகளால் உணரலாம்.

நீர்ப்பெருக்கால் கரைகள் உடைந்து ஊரில் சேதம் ஏற்படாமல் தடுக்க நீர்நிலைகளில் காப்பாளர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர் என்பதை,

''மாரிக் குளத்துக் காப்பாளன்'' (ஐங்குறு.206)

என்று ஐங்குறுநூறும்,

''பெருங்குளன் காவலன் போல'' (அகம்.252)

என அகநானூறும் எடுத்தியம்பியுள்ளன.

கலங்கிய, மாசுள்ள நீரைத் தூய்மையாக்கக் 'கடுக்காய்' பயன்படுத்தப்பட்டுள்ளது.

சான்று:

''செங்கண் சில்நீர் பெய்த சீறில்
முன்றில் இருந்த முதுவாய்ச் சாடி
யாம் கஃடு உண்டென வறிது மாசு இன்று'' (புறம்.319)

இவை போன்று இன்னும் பல சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வுச் செய்திகள் தமிழிலக்கியங்களில் நிரம்ப உள்ளன. அவையெல்லாம் பண்டைத் தமிழரின் சூழலியல் குறித்த பேரறிவிற்கான சான்றுகளாகும்.

**இரா.பாலாஜி**
உதவி செய்தி மக்கள் தொடர்பு அலுவலர்
செய்தித்துறை

❖ ❖ ❖

# மால்கொடி

நீண்ட நாள்களாகத் தேடிக் கொண்டிருந்த ‘மால்கொடி’ இன்றுகிடைத்தது. நண்பர் ஒருவர் மூலம் இக்கொடியைத் தெரிந்து கொண்டோம். குரும்பர் பழங்குடிகள் தேனெடுக்க ஏணிஅமைத்து மலை முகடுகளை அடைவர். அதற்குப் பலவகையான ஏணிகளைப் பயன்படுத்துவர். அதில் ஒன்றுதான் இந்த மால்பு ஏணி. காட்டில் கிடைக்கும் ஒருவகையான கொடியைப் பிணைத்து இவற்றை உருவாக்குகிறார்கள். இவ்வேணி மால்பு ஏணியாதலால் இக்கொடிக்கு ‘மால்புகொடி’ எனப்பெயர் வந்துள்ளது. வழக்கில் ‘மாலுக்கொடி’ என்கின்றனர்.

உயரமான மலைகளில் தேனெடுக்க ‘மால்பினைப்’ பயன்படுத்துவர்என்பது,

‘பெருந்தேன் கண்படுவரையில் முதுமால்பு அறியாது ஏறியமட வோன்போல’ – (குறுந்தொகை 273)

‘மால்புடை நெடுவரைக் கோடுதோறிழி தரும்’– (புறம் 105)

என்றும் இம்மால்பு நிலையாக இருக்கும் என்பது,

‘நெடுவரை, நிலைபெய்து இட்டமால்பு நெறியாக பெரும்பயன் தொகுத்த தேங்கொள்கொள்ளை’ – (மலைபடுகடாம் 315 – 316)

என்றும் தினைப் புனத்தின் புகையால், ஒளி மங்கிய நிலவு தேனடை எனக் கருதி வேங்கை மரப் பரணிலிருந்து ஏணி அமைந்திருப்பர் என்பது

‘வானூர் மதியம் வரை சேரின வரைத், தேனினிறாலென வேணியிழைத்திருக்கும்’– (கலித்தொகை 39)

என்றும் கழக (சங்க) இலக்கியங்கள்கூறுகின்றன. இன்றும் மலைமக்கள் இம்மால்பைப் பயன்படுத்தித் தேனெடுப்பதைக் காணும் போது வியப்பாக உள்ளது.

– நன்றி பாலாபாரதி புலனப் பதிவு







# சோறு சாதம்

இந்தச் சொற்களுக்குப் பின்னால் மிகப் பெரிய அரசியல் இருக்கிறது. நம்மில் எத்தனை பேர் பொதுவெளியில் சோறு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறோம்.

திருமண விருந்தில் உரத்தக் குரலில் ''சோறு கொண்டு வாங்க'' என்று நாம் கூப்பிடுகிறோமா ? கூப்பிடுவதில்லை.

காரணம், நம்மை அறியாமல் சோறு என்ற சொல்லை ஒரு தாழ்ச்சிக்குரிய ஒன்றாக மாற்றி வைத்திருக்கிறார்கள்.

நகைச்சுவைத் துணுக்குகளில், திரைப்படங்களின் நகைச்சுவைக் காட்சிகளில் இரவலர் (பிச்சைக்காரர்) ''அம்மா, தாயே சோறு போடு தாயீ'' என்று கூறுவதாக வரும்.

எந்த இரவலனாவது ''அம்மா தாயே சாதம் போடுங்க'' என்று வருகிறதா ? அது ஏன் ?

திட்டமிட்டுச் சோறு கீழான ஒன்றாகக் காட்டப் படுகிறது; சாதம் உயர்வான ஒன்றாக மாற்றப்படுகிறது.

சோறு என்பது கழக (சங்க) இலக்கியக் காலத்தில் இருந்து நம்முடன் வருகிறது. ''பெருஞ்சோற்று உதியன்'' என்ற அடைமொழியுடன் புறநானூற்றில் வேந்தர்கள் வந்து போகிறார்கள். ''வயிற்றுக்குச் சோறிட வேண்டும் – இங்கு வாழும் மனிதருக்கெல்லாம்'' என்று பாரதி பாடியுள்ளான்.

இழிவு செய்யும் இடங்களில் மறக்காமல் சோறு எனக் குறிப்பிடப்படுகிறது. ''சோத்துக்கு வழியில்லாத நாயி'' என்று திரைப்படங்களில் பேசப்படுவதைப் பார்க்கிறோம். ''சாதத்துக்கு வழியில்லாத நாயி'' என்று எழுதப்படுகிறதா ?

காரணம் ? அதன் பின்னால் உள்ள அரசியல்.

''கல்யாண சமையல் சாதம்'' என்று புகழ்ந்து பாடல் வரும். ''எச்ச சோறு'' என்று இகழ்ந்து உரையாடல் (வசனம்) வரும். இதில் இருந்தே இதன் பின்னுள்ள அரசியலைப் புரிந்து கொள்ளலாம். உச்சக்கட்டமாக வீடுகளில் பிள்ளைகளைத் திட்ட ''தண்டச் சோறு'' என்ற இடம் வரை வந்து நிற்கிறது. எங்காவது ''தண்ட சாதம்'' என்று சொல்வதுண்டா ?

சாதம் என்ற சொல், பிரசாதம் என்ற சொல்லின் விகுதி. பிரசாதம் என்பது உயர்வான ஒன்றாகப் பார்க்கப்படுகிறது. கோயில்களில் பூசனைகளுக்குப் பிறகு வழங்கப்படும் தேங்காய் – பழம் போன்றவற்றுக்கு பிரசாதம் என்று பெயரிடப்பட்டுள்ளது.

மதிப்பிற்குரிய ஒன்றாகப் பொது இடங்களில் பிரசாதம் பயன்படுத்தப்படுகிறது. அந்தச் சொல்லின் சரிபாதி சாதம் என்பது ஏதோ ஒரு நன்னாளில் பெயர் சூட்டுவிழா கண்டுள்ளது.

உணவு விடுதிகளில் புளியஞ்சோறு, எலுமிச்சைச் சோறு, தக்காளிச் சோறு என்பது இடமாறி, புளி சாதம், எலுமிச்சை சாதம், தயிர் சாதம், தக்காளி சாதம் என்று பட்டியல் நீள்கிறது. குழந்தைகளுக்குப் பருப்புச் சோறு ஊட்டப்பட்டது போய் பருப்பு சாதம் கொடுப்பது உயர்வாக மாறி நிற்கிறது.

இதுவெறும் வடமொழிச் சொல் – தமிழ்ச் சொல் வேறுபாட்டை அறிவதற்கான பதிவல்ல. தமிழ்ச் சொற்கள் தாழ்வான ஒன்றாக நம் மனத்திலே பதிய வைத்து நம்மையே அச்சொல்லைச் சொல்ல முடியாமல் போகும் அளவுக்கு மாற்றுவதற்குப் பின்னுள்ள அரசியலை விவரிக்கும் பதிவே.

தாய்மொழியில் பேசவும் எழுதவும் முடியாத ஒருவன், எப்படித் தாய்மொழிக்காகச் சிந்திக்க முடியும் ? சாதம் என்பதற்கு மாற்றாக, சோறு என்பதையே பயன்படுத்துவோம். ❖